# உயர்கல்வி வழிகாட்டி

## 1. முன்னுரை:

அரசு பள்ளி மாணவர்களுக்கு, அரசு கல்லூரிகள் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தி, அக்கல்லூரிகளில் அவர்கள் உயர்கல்வி பயின்று விளிம்பு நிலையிலிருந்து முன்னேற வேண்டும் என்ற நோக்கத்தில் இந்த ஆவணம் தொகுக்கப்பட்டுள்ளது. அரசு, பள்ளிகளில் இலவசமாக பள்ளி கல்வியை வழங்குவதைப் போல, பள்ளிப் படிப்புக்குப் பின் பல்வேறு துறைகளில் உயர் கல்வி (இளங்கலை பட்டம், முதுகலை பட்டம் மற்றும் பல) பயிலவும் பல்வேறு அரசு கல்லூரிகளும் பல்கலைக்கழகங்களும் அரசால் குறைந்த கட்டணத்தில் இயக்கப்பட்டு வருகிறது. பல்வேறு துறை சார்ந்த படிப்புகள் குறித்தும், அரசு கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழகங்கள் குறித்தும் இவ்வாவணத்தில் காண்போம்.

## 2. கல்வி:

ஒரு குழந்தை தாயின் கருவறையிலிருந்து பிறந்து, வளர்ந்து, பள்ளி செல்லும் பருவம் வந்ததும் மாணவராக பள்ளியில் சேர்க்கப்படுகிறார். சுற்று வட்டாரங்களில் பாலர் (Nursery) பள்ளிகள் அமைந்தும், பெற்றோருக்கு பொருளாதார சூழல் அமைந்தும், போதுமான விழிப்புணர்வும் இருப்பின் Pre-KG, LKG, UKG வகுப்புகளில் சேர்க்கப்பட்டு மூன்றாண்டுகள் பயில்கிறார். பின்னர் ஒன்றாம் வகுப்பிலிருந்து பன்னிரெண்டாம் வகுப்பு வரை பள்ளியில் பயில்கிறார். பன்னிரண்டாம் வகுப்புக்கு பின்னர் மாணவரின் கல்வியானது பட்டயம்(Diplomo Course)/இளங்கலை பட்டம்(Bachelor Degree), முதுகலைப் பட்டம் (Master Degree), ஆராய்ச்சி (Ph.D – Doctor of Philosophy), Post Doctoral Fellowship (Pdf) வரை பட்டியல் நீள்கிறது.



## 3. <u>பள்ளி கல்வி:</u>

பாடத்திட்டம், பயிற்று மொழி, பள்ளி நிர்வாகம் போன்ற பல்வேறு காரணிகளைப் பொருத்து பள்ளி கல்வியை கீழ்கண்டவாறு பிரிக்கலாம்




### 3.1. தமிழ் வழிக்கல்வி:

ஆங்கிலம் நீங்கலாக ஏனைய அனைத்து பாடங்களையும் தமிழில் பயிற்றுவிப்பது தமிழ் வழிக் கல்வி எனப்படுகிறது. தமிழ் வழிக் கல்வியானது தமிழக அளவில் இயங்கும் பள்ளிகளில் மாநில பாடத்திட்டத்தைக் கொண்டு பயிற்றுவிக்கப்படுகிறது.

### 3.2. ஆங்கில வழிக்கல்வி:

மொழிப்பாடம் நீங்கலாக ஏனைய அனைத்து பாடங்களையும் ஆங்கிலத்தில் பயிற்றுவிப்பது ஆங்கில வழிக் கல்வி எனப்படுகிறது. ஆங்கில வழிக் கல்வியை பயிற்றுவிக்கும் பாடத்திட்டத்தை பொருத்து மாநில வழிக் கல்வி (English Medium State Board), மெட்ரிக் (Matriculation), CBSE (Central Board of Secondary Education) என்று வகைப்படுத்தலாம். மேலும் சில பிரிவுகளும் உண்டு

## 4. <u>பள்ளியின்/கல்லூரியின் வகைகள்:</u>

### கல்லூரி:

கல்லூரி என்பது பள்ளிக் கல்விக்குப் பின்பு உயர்கல்வி (Diploma/Bachelor degree/Master degree..etc) படிக்கும் இடத்தைக் குறிக்கும். இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலும் பல இடங்களில் பள்ளிப் படிப்பிற்குப் பின்பு உயர்கல்வியை அளிப்பதற்காக கல்லூரிகள் நிறுவப்பட்டுள்ளன. இந்தக் கல்லூரிகள் அனைத்தும் அந்தந்தப் பகுதியில் அமைந்துள்ள ஏதாவதொரு பல்கலைக்கழகம் ஒன்றுடன் இணைக்கப்பட்டு அந்தப் பல்கலைக்கழகத்தின் கீழ் அதன் வழிகாட்டுதல்களின்படி செயல்படுகின்றன.

கல்லூரிகள்/பள்ளிகள் நிர்வாகம் செய்யப்படும் முறையைப் பொருத்து அவற்றை கீழ்கண்டவாறு பிரிக்கலாம்




**4.1. அரசு பள்ளிகள்/கல்லூரிகள்:**

தமிழ்நாடு அரசின் நேரடி கட்டுப்பாட்டில் அல்லது அரசின் உள்ளாட்சி அமைப்புகளான மாநகராட்சி, நகராட்சி, ஊராட்சி ஒன்றியங்கள் போன்றவற்றின் கீழாக அல்லது பிற அரசுத் துறைகளின் கீழ் உள்ள நிர்வாக அமைப்புகளின் கீழ் செயல்படுத்தப்படும் பள்ளிகள்/கல்லூரிகள் அரசு பள்ளிகள்/கல்லூரிகள் எனப்படுகின்றன.

**4.2. அரசு உதவி பெறும் பள்ளிகள்/கல்லூரிகள்:**

தனியார் அறக்கட்டளைகள், சங்கங்கள் போன்றவற்றின் நிர்வாகத்தில் அரசின் கட்டுப்பாடுகளின் கீழ் செயல்படுத்தப்படும் பள்ளிகள்/கல்லூரிகள் அரசு உதவி பெறும் பள்ளிகள்/கல்லூரிகள் என்றழைக்கப்படுகின்றன.

**4.3. தனியார்/சுயநிதிப் பள்ளிகள்/கல்லூரிகள்:**

தனியார் அறக்கட்டளைகள், சங்கங்கள் போன்றவற்றின் முழுமையான நிர்வாகத்தில் நடத்தப்படும் பள்ளிகள்/கல்லூரிகள் "தனியார்/சுயநிதிப் பள்ளிகள்/கல்லூரிகள்" என்றழைக்கப்படுகின்றன. இத்தகைய பள்ளிகளில்/கல்லூரிகளில் படிக்கும் மாணவர்கள் தமிழக அரசு ஆண்டுதோறும் அறிவிக்கும் கட்டணத்தை செலுத்திப் படிக்கின்றனர்.

**5. <u>பல்கலைக்கழகம்:</u>**

பல்கலைக்கழகம் என்பது மாணவர்களுக்கு உயர் கல்வியை (Bachelor Degree, Master Degree) வழங்குவதற்கும், அம்மாணவர்கள் உயர்கல்வியைப் பெற்ற பின் அவர் சார்ந்த துறையில் மேற்படி ஆய்வை (Phd) மேற்கொள்வதற்காகவும் கட்டமைக்கப்பட்ட ஒரு நிறுவனம். பல்வேறு துறைகளில் பட்டப்படிப்பையும் பட்டமேற்படிப்பையும் பல்கலைக்கழங்கள் வழங்குகின்றன. பல்கலைக்கழங்கள் நிர்வாகம் செய்யப்படும் முறையைப் பொறுத்து கீழ்கண்டவாறு பிரிக்கலாம்




**5.1. மத்திய பல்கலைக்கழகம் (Central University):**

மத்திய அரசால் நிறுவப்பட்டு மத்திய மனித வள அமைச்சகத்தின் கீழ் இயங்கும் பல்கலைக்கழகங்கள் மத்திய பல்கலைக்கழகங்கள் ஆகும். இவை இந்திய அளவில் இயங்கி வரும் பல்கலைக்கழகங்கள்.

**5.2. மாநில பல்கலைக்கழகம் (State University):**

மாநில அரசால்(State Government) /யூனியன் பிரதேசங்களால் (Union Territories) நிறுவப்பட்டு அவற்றின் கட்டுப்பாட்டில் இயங்கும் பல்கலைக்கழகங்கள் மாநில பல்கலைக்கழகங்களாகும். ஒவ்வொரு மாநில பல்கலைக்கழகத்தின் கீழும் பல்வேறு உறுப்பு கல்லூரிகள் இயங்கி வருகின்றன. இக்கல்லூரிகளில் இளங்கலை, முதுகலை பட்டங்கள் வழங்கப்படுகின்றன. சில கல்லூரிகளில் ஆராய்ச்சிப் படிப்புக்கான இடங்களும் உள்ளன.

**5.3. தனியார்/நிகர்நிலை பல்கலைக்கழகம் (Private University):**

தனியாரால் நிறுவப்பட்டு தனியாரால் நிர்வகிக்கப்படும் பல்கலைக்கழகங்கள் தனியார்/நிகர்நிலை பல்கலைக்கழகங்களாகும். இப்பல்கலைக்கழகங்கள் மாணவர்களுக்கு பட்டங்களை வழங்கும். ஆனால் தனியார் பல்கலைக்கழகத்திற்கு மத்திய/மாநில பல்கலைக்கழகங்களை போல வளாகத்திற்கு வெளியே உறுப்பு கல்லூரிகள் இயக்குவதற்கு அனுமதியில்லை.

**6. <u>கட்டணச் சலுகையும் மதிப்பெண்ணும்:</u>**

கீழே குறிப்பிட்டது போல பள்ளி பொதுத் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்றால், அரசு அல்லது அரசு உதவி பெறும் கல்லூரிகளில் இடம் கிடைப்பதற்கான வாய்ப்பு அதிகம். இக்கல்லூரிகளில் சேர்வதற்கு பள்ளி பொதுத் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவதைக் குறிக்கோளாகக் கொண்டு பள்ளியில் தங்கள் பாடங்களைப் புரிந்து பயில வேண்டும். இதனால் கல்விக் கட்டணம் குறைவாய் இருக்கும்.




**7. <u>இட ஒதுக்கீடு/பிரதிநிதித்துவம் விகிதாச்சாரம்:</u>**

தமிழ்நாட்டில் தமிழக அரசின் கட்டுப்பாட்டில் இயங்கும் கல்லூரிகள்/பல்கலைக்கழகங்கள்/நிறுவனங்கள் போன்றவற்றில் பொதுப் பிரிவினருக்கு (OC) 31%ம், பிற்படுத்தப்பட்ட பிரிவினருக்கு (BC) 26.5%ம், பிற்படுத்தப்பட்ட இசுலாமியருக்கு (BCM) 3.5% இடஒதுக்கீடும், மிகவும் பிற்படுத்தப்பட்ட பிரிவினருக்கு (MBC) 20%ம், பட்டியல் பிரிவினருக்கு (SC) 15%ம், பட்டியல் பிரிவினரில் ஒன்றான அருந்ததியருக்கு (SCA) 3%ம், பட்டியல் பழங்குடியினருக்கு (ST) 1%ம் இடஒதுக்கீடு வழங்கப்பட்டுள்ளது. மேலும் முன்னாள் இராணுவ வீரர்களின்(Ex-Service man) வாரிசுகள், விளையாட்டு வீரர்கள்(Sports quota), மாற்றுத் திறனாளிகள் (Differently Abled) இவர்களுக்கும் விகிதாச்சார அடிப்படையில் இடஒதுக்கீடு வழங்கப்பட்டுள்ளது. கல்லூரிகளிலுள்ள இடங்கள் இவ்விகிதாச்சார அடிப்படையில் ஒதுக்கப்பட்டு மாணவர் சேர்க்கை நடைபெறும்.



## 8. உயர்கல்வி குறித்த கழுகு பார்வை:

கழுகு வானில் பறக்கும் பொழுது புவியிலுள்ள மலை, காடு, ஊர், நீர்நிலை, ஆறு போன்றவை முதல் சிறு விலங்குகள்/பறவைகள் வரை அனைத்தையும் உற்றுக் கவனிக்கும் பார்வை திறன் கொண்டது. அது போல பள்ளி மாணவர்கள் உயர்கல்வி குறித்தும், பல்வேறு துறைகள் குறித்தும் விவரங்களை அறிந்து விழிப்புடன் தாங்கள் பயில விரும்பும் படிப்பை குறிக்கோளாய் எண்ணி பள்ளியில் கற்க வேண்டும்.

கீழ்கண்ட படத்தில் குறிப்பிட்டபடி ஒவ்வொரு தனிமனிதனும் ஒரு குடும்பத்தின் அங்கம். ஒவ்வொரு குடும்பமும் சமூகத்தின் அங்கம். சமூகத்திலுள்ள மனிதர்களின் அடிப்படை தேவைகளான உணவு, உடை, இருப்பிடம் போன்றவையும் இதர தேவைகளும் நாள் தோறும் ஒவ்வொரு தனிமனிதனுக்கும் கிடைக்க வேண்டியவை. நாம் படிக்கும் ஒவ்வொரு துறை சார்ந்த படிப்பும் அடிப்படையில் இத்தேவைகளை பூர்த்தி செய்வதற்கும், மேம்படுத்துவதற்கும் பயன்படுகிறது.

எடுத்துக்காட்டுகள்:

1. வேளாண்துறை சார்ந்த இளங்கலை மற்றும் தொழில்நுட்ப படிப்புகள்
2. நூல் நூற்பு, நெசவு, ஆடை வடிவமைத்தல் சார்ந்த படிப்புகள்
3. பொறியியல், தொழில்நுட்பம் மற்றும் கட்டடக் கலை சார்ந்த படிப்புகள்
4. உயிர் காக்கும் நவீன/மரபு வழி மருத்துவம் சார்ந்த படிப்புகள்
5. வணிகம் மற்றும் பொருளாதாரம் சார்ந்த படிப்புகள்
6. தரைப்படை, கப்பற்படை, விமானப்படை போன்ற பாதுகாப்பு சார்ந்த படிப்புகள்
7. கால்நடை, பறவை, மீன் வளம் சார்ந்த படிப்புகள்
8. சட்டம், ஒழுங்கு சார்ந்த படிப்புகள்



## 9. கல்லூரியைத் தேர்ந்தெடுக்கும் முறை:

கீழே குறிப்பிடப்பட்டுள்ளவற்றை கருத்தில் கொண்டு அரசு கல்லூரியிலோ அல்லது அரசு உதவி பெறும் கல்லூரியிலோ அல்லது தனியார் கல்லூரியிலோ மாணவர்கள் அவரவர் விரும்பும் படிப்பைத் தேர்ந்தெடுத்தல் நலம்.

1. பொதுத்தேர்வில்/நுழைவுத் தேர்வில் (சில படிப்புகளுக்கு மட்டும் பொருந்தும்) பெற்ற மதிப்பெண்கள்
2. மாணவர் தேர்ந்தெடுக்கும் படிப்பும் கல்லூரியும் முறையாக அங்கீகாரம் பெற்றவையா என்பதை உறுதி செய்தல்
3. வீட்டுக்கு அருகாமையில் உள்ள கல்லூரியா அல்லது விடுதியில் தங்கி படிக்க வேண்டிய சூழலா என்பதை அறிதல்
4. கல்லூரி மற்றும் தங்கும் விடுதிகளின் உட்கட்டமைப்பு

## 10. விண்ணப்பப் படிவம் பெறுதல் முதல் கலந்தாய்வு வரை:

மாணவர்கள் பன்னிரண்டாம் வகுப்பு பொதுத்தேர்வு எழுதி முடித்த பின்னர் விடுமுறை காலங்களில் அவர்களது நண்பர்களுடன் தாங்கள் படிக்க விரும்பும் படிப்பு குறித்து அடிக்கடி உரையாட வேண்டும். உயர்கல்வி குறித்த விவரங்கள் அறிந்திடாத தங்களது நண்பர்களுக்கு உயர் கல்வி குறித்த விழிப்புணர்வை இவ்வுரையாடல் மூலமாக ஏற்படுத்த வேண்டும். மேலும் தொலைக்காட்சியில் செய்திகளை பார்ப்பதன் வாயிலாகவும், அவரவர் ஊர்களில் உள்ள நூலகத்திற்கு சென்று செய்தித்தாள்களைப் படிப்பதன் வாயிலாகவும், உயர்கல்விக்கு விண்ணப்பித்தல் தொடர்பான விவரங்களை அறிந்திடல் வேண்டும்.

### i. விண்ணப்பத்தைப் பெறுதல்:

பெரும்பாலான கல்லூரிகள்/பல்கலைக் கழகங்கள் உயர்கல்விக்கு விண்ணப்பித்தல் தொடர்பான விவரங்களை செய்தித்தாள்கள், தொலைக்காட்சி செய்திகள், அக்கல்வி குழுமம் சார்ந்த இணையதளம் போன்றவற்றின் மூலம் அறிவிக்கும். இதனை மாணவர்கள் விழிப்புடன் அறிந்து தக்க நேரத்தில் விண்ணப்பப் படிவங்களைப் (Application form) பெற வேண்டும்.

### ii. விண்ணப்பத்தை நிரப்பி அனுப்புதல்:

மாணவர்கள் அவரவர் விருப்பம் சார்ந்த படிப்புக்கான விண்ணப்ப படிவத்தினைப் பெற்ற பின், அதனை பூர்த்தி செய்து பல்கலைக்கழகத்திற்கு /கல்லூரிக்கு குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்பி வைக்க வேண்டும். சில படிப்புகளுக்கு தேவைப்படின் நேரில் அக்கல்வி குழுமத்திற்கு சென்று பூர்த்தி செய்த விண்ணப்பப் படிவத்தினைக் அளிக்க வேண்டும். சில படிப்புகளுக்கு இணையதளத்தில் விண்ணப்பத்தை பூர்த்தி செய்து, பூர்த்தி செய்த விண்ணப்பத்தை குறிப்பிடப்பட்ட முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

### iii. ஒப்புகை அட்டை (Acknowledgement Card):

மாணவர்கள் விண்ணப்பத்தை நிரப்பி அனுப்பும் பொழுது, அதனுடன் தங்கள் முகவரியை ஒப்புகை அட்டையில் (Acknowledgement card) எழுதி விண்ணப்பத்துடன் சேர்த்து அனுப்பி வைக்க வேண்டும். மாணவர்கள் அனுப்பும் விண்ணப்பம் கல்லூரிக்கு/பல்கலைக்கழகத்திற்கு சென்றடைந்ததை உறுதிப்படுத்தும் வகையில் ஒப்புகை அட்டை கல்லூரியிலுருந்து/ பல்கலைக்கழகத்திலிருந்து மாணவர்களின் முகவரிக்கு திருப்பி அனுப்பி வைக்கப்படும். இதன் மூலம் மாணவர்கள் தாங்கள் அனுப்பிய விண்ணப்பம் கல்லூரிக்கு/பல்கலைக்கழகத்திற்கு சென்றடைந்ததை உறுதிபடுத்திக் கொள்ளலாம்.

### iv. தரவரிசைப் பட்டியல் (Rank list):

கல்லூரி/பல்கலைக் கழகம் அனைத்து மாணவர்களும் அனுப்பிய விண்ணப்பங்களை சரி பார்த்து மாணவர்களது மதிப்பெண்ணின் அடிப்படையில் தர வரிசைப் பட்டியலை வெளியிடும்.

**v. கலந்தாய்வு கடிதம் (Counselling Letter):**

கல்லூரி/பல்கலைக்கழகம் மாணவர்களது மதிப்பெண்ணின் அடிப்படையில் ஒவ்வொரு மாணவருக்கும் கலந்தாய்வுக்கான கடிதத்தை அவரவர் முகவரிக்கு அனுப்பி வைக்கும். அக்கலந்தாய்வுக் கடிதத்தில் கலந்தாய்வு நடைபெறும் இடம், நாள், நேரம், கலந்தாய்வுக்கு கொண்டு செல்ல வேண்டிய சான்றிதழ்கள் போன்றவை குறிப்பிடப்பட்டிருக்கும். மாணவர்கள் அக்கடிதத்தில் குறிப்பிட்டபடி ஆயத்த நிலையில் இருக்க வேண்டும். மேலும் அக்கடிதத்தில் குறிப்பிடப்பட்ட நாளில் மாணவரும், மாணவருடன் அவரது பெற்றோர்/மாணவருக்கு கல்வியில் வழிகாட்டுபவர் இருப்பதற்கான முறையான திட்டமிடுதல் வேண்டும்

**vi. கலந்தாய்வுக்கு செல்லும் முன் ஆயத்தமாகுதல்:**

மாணவர்கள் கலந்தாய்வுக்குச் செல்லும் ஒரு நாளுக்கு முன்னர் வாய்ப்பு இருப்பின், அன்றைய நிலவரப்படி மீதமுள்ள கல்லூரிகள், காலி இடங்கள் (Vacancy) ஆகியன குறித்து இணையதளம் வாயிலாக அறிந்து மீதி உள்ள இடங்களில் (Vacancy) தாங்கள் தேர்ந்தெடுக்க விரும்பும் கல்லூரிகள், கல்வி குறித்த சிறு பட்டியலை (Priority list) தயாரிக்க வேண்டும். இப்பட்டியல் அடுத்த நாள் கலந்தாய்வின் போது குழப்பமின்றி கல்லூரியைத் தேர்ந்தெடுக்க உதவும்

**vii. கலந்தாய்வு:**

கலந்தாய்வு நடைபெறும் இடத்தை சென்றடைந்தவுடன் அன்றைய நிலவரப்படி கலந்தாய்வில் மீதியுள்ள இடங்களை தெளிவான மனநிலையில் தொடர்ந்து கவனிக்க வேண்டும். தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நேரம் வந்தவுடன் கலந்தாய்வு ஆலோசகரிடம் தாங்கள் தேர்ந்தெடுக்க விரும்பும் கல்வி, கல்லூரியைத் தெரிவித்து அதனைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மேலும் கலந்தாய்வின் முடிவில் படிப்பைத் தேர்ந்தெடுத்தமைக்கான கடிதத்தினை பெற்று வர வேண்டும்.

**viii. கல்லூரி சேர்க்கை:**

மாணவர்கள் தாங்கள் தேர்ந்தெடுத்த கல்லூரிக்குச் சென்றோ/தொலைபேசி வாயிலாகவோ கல்வி கட்டணம்/விடுதிக் கட்டணம் (தேவை இருப்பின்) தொடர்பான விவரங்கள் அறிந்து, கடிதத்தில் குறிப்பிட்ட தேதிக்குள் கட்டணத்தை செலுத்த வேண்டும். மேலும் கலந்தாய்வு முடிவில் கொடுக்கப்பட்ட கடிதத்தில் குறிப்பிடப்பட்ட நாளுக்குள் கல்லூரியில் சேர வேண்டும்.

**11. முக்கிய குறிப்பு:**

இந்த ஆவணம், 2016 மற்றும் 2017 ஆம் ஆண்டு தரவுகளின் அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும், ஒவ்வொரு கல்லூரியிலும் சில பிரிவுகள் சேர்க்கப்படலாம், சில பிரிவுகள் நீக்கப்படலாம். கட்- ஆப் மதிப்பெண்கள் ஆண்டுக்கு ஆண்டு மாறுபடும். கல்விக் கட்டணமும் ஒவ்வொரு ஆண்டும் மாறுதலுக்கு உட்படலாம். சில நேரங்களில் சில படிப்புகளுக்கு நுழைவுத் தேர்வு கட்டாயம் என்ற அரசாணை பிறப்பிக்கப்படலாம். ஆகவே இவை அனைத்தையும் கருத்தில் கொண்டு, இவ்வாவணத்தை உயர்கல்வி குறித்த விழிப்புணர்வுக்கான அடிப்படை ஆவணமாகக் கருதி, மாணவர்கள் நடப்பு ஆண்டிற்கான இடங்களின் எண்ணிக்கை, கல்லூரிகளிலுள்ளப் பாடப்பிரிவுகள், நுழைவுத் தேர்வு உண்டா/இல்லையா, கல்வி கட்டணம், கட்-ஆப் மதிப்பெண்கள் குறித்த தரவுகளை பல்கலைக் கழகங்களுக்கோ/கல்லூரிகளுக்கோ சென்று அல்லது செய்தித்தாள்கள்/இணையதளம் வாயிலாக அறிந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் நேரமின்மையின் காரணமாக சில கல்லூரிகள் மற்றும் படிப்புகள் இந்த ஆவணத்தில் விடுபட்டிருக்கின்றன. அவ்வாறு விடுபட்ட படிப்பு/கல்லூரிகள் குறித்து, தயவு கூர்ந்து கல்வியில் உங்களுக்கு வழிகாட்டும் நண்பர்கள்/உறவினர்கள்/ஆசிரியர்கள் மூலம் அறிந்து கொண்டு நீங்கள் விரும்பும் படிப்பை/கல்லூரியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். முடிந்தமட்டில் அடுத்த கல்வி ஆண்டில் விடுபட்ட படிப்பு மற்றும் கல்லூரி பற்றிய விவரங்களை முழுமையாகத் தர முயற்சிக்கிறோம்.

**12. <u>உயர் கல்வி</u>**

கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் உள்ளபடி பல்வேறு படிப்புகள் அரசு பல்கலைக் கழகங்களின் கீழ் இயங்கி வரும் பல்வேறு கல்லூரிகளில் கற்பிக்கப்படுகின்றன.




பின்வரும் அட்டவணைகளில் P, C, B, Z, Bio, M, Bio-Tech, MicroBio, BioChem, HS, CS, AP என்று குறிப்பிடப்பட்டுள்ளவற்றை கீழ்கண்டவாறு விரிவாக்கம் செய்து புரிந்து கொள்க. எடுத்துக்காட்டாக P, C, Bio என்பதை Physics, Chemistry மற்றும் Biology எனக் கொள்க.

P – Physics
C – Chemistry
B – Botany
Z – Zoology
Bio – Biology
M – Mathematics
Bio-Tech – Bio Technology
MicroBio – Microbiology
BioChem – Biochemistry
HS – Home Science
CS – Computer Science
AP – Agricultural Practices

**12.1. வேளாண்மை சார்ந்த படிப்புகள்:**

கீழ்கண்ட அரசு கல்லூரிகளில் வேளாண்மை சார்ந்த படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன

| பாடப் பிரிவு | கல்லூரி | இடங்கள் | ஆண்டு கல்வி கட்டணம் |
|---|---|---|---|
| B.Sc – Agriculture | Agricultural College and Research Institute (AC & RI), Coimbatore | 99 | Approx Rs 40000 |
| | AC&RI, Madurai | 119 | |
| | AC&RI, Killikulam | 101 | |
| | ADAC&RI, Trichy | 101 | |
| | AC&RI, Vaazhavachanur | 60 | |
| | AC&RI, Kudumiyanmalai | 60 | |
| | AC&RI, Thanjavur | 60 | |
| B.Sc - Horticulture | Horticultural College & Research Institute (HC & RI), Periyakulam | 80 | Approx Rs 40000 |
| | HC&RI for Women, Trichy | 45 | |
| B.Sc – Forestry | Forest College and Research Institute, Mettupalayam - | 45 | Approx Rs 40000 |
| B.Sc - Food, Nutrition & Dietics | Home Science College and Research Institute, Madurai | 45 | Approx Rs 40000 |
| B.Tech - Agricultural Engineering | Agricultural Engineering College and Research Institute, Kumulur, Pallapuram (PO), Tiruchirappalli | 70 | Approx Rs 40000 |
| B.Sc - Sericulture | Forest College and Research Institute, Mettupalayam - | 30 | Approx Rs 40000 |
| B.Tech - Horticulture | Horticultural College & Research Institute (HC & RI), Coimbatore | 30 | Approx Rs 120000 |
| B.Tech - Food Process Engineering | Agricultural Engineering College and Research Institute (AEC & RI), Coimbatore | 55 | Approx Rs 120000 |
| B.Tech - Energy and Environmental Engineering | Agricultural Engineering College and Research Institute (AEC & RI), Coimbatore | 55 | Approx Rs 120000 |
| B.Tech - Bio Technology | AC & RI, Coimbatore | 55 | Approx Rs 120000 |
| B.Tech - Bio Informatics | AC & RI, Coimbatore | 35 | Approx Rs 120000 |
| B.Sc - Agri-Business Management | AC & RI, Coimbatore | 45 | Approx Rs 120000 |
| B.Tech - Agricultural Information Technology | AC & RI, Coimbatore | 30 | Approx Rs 120000 |

**வேளாண்மை சார்ந்த அறிவியல் படிப்புகள்:**

| பட்டம் | பிரிவு | ஆண்டுகள் | கல்வி தகுதி (HSC பாடப் பிரிவு) |
|---|---|---|---|
| B.Sc | Agriculture | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, B, Z<br>**OR**<br>P, C, Bio, [Bio-Tech/MicroBio/BioChem/HS]<br>**OR**<br>Bio, AP (Vocational group) |
| B.Sc | Horticulture | 4 | |
| B.Sc | Forestry | 4 | |
| B.Sc | Food & Nutrition and Dietetics | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, B, Z<br>**OR**<br>P, C, Bio, [Bio-Tech/MicroBio/BioChem/HS] |
| B.Sc | Sericulture | 4 | |

**வேளாண்மை சார்ந்த தொழில்நுட்பப் படிப்புகள்:**

| பட்டம் | பிரிவு | ஆண்டுகள் | கல்வி தகுதி (HSC பாடப் பிரிவு) |
|---|---|---|---|
| B.Tech | Agricultural Engineering | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, M, CS<br>**OR**<br>[Bio/M/P], AP (Vocational group) |
| B.Tech | Food Process Engineering | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, M, CS |
| B.Tech | Energy and Environmental Engineering | 4 | |
| B.Tech | Biotechnology | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, B, Z<br>**OR**<br>P, C, Bio, [Bio-Tech/MicroBio/BioChem/HS] |
| B.Tech | Horticulture | 4 | |
| B.Tech | Bioinformatics | 4 | |
| B.S | Agribusiness management | 4 | |
| B.Tech | Agricultural Information Technology | 4 | P, C, M, Bio<br>**OR**<br>P, C, Bio, CS |

வேளாண்மை சார்ந்த படிப்பு குறித்த விவரங்களை மேலும் அறிய http://www.tnau.ac.in/ இணையதளத்தைக் காணவும்

**12.2. மருத்துவம் சார்ந்த படிப்புகள்:**

**மரபு வழி மருத்துவம் (Traditional Medicine):**

| படிப்பு | விரிவாக்கம் | ஆண்டுகள் | பாடப் பிரிவு (HSC) |
|---|---|---|---|
| B.S.M.S | Bachelor of Siddha Medicine & Surgery | 5.5 | P, C, B, Z<br>**OR**<br>P, C, Bio |
| B.U.M.S | Bachelor of Unani Medicine & Surgery | 5.5 | |
| B.A.M.S | Bachelor of Ayurveda Medicine & Surgery | 5.5 | |
| B.N.Y.S | Bachelor of Naturopathy & Yogic Sciences | 5.5 | |
| B.H.M.S | Bachelor of Homoeopathy Medicine & Surgery | 5.5 | |

B.S.M.S → மேற்குறிப்பிட்ட கல்வி தகுதி தவிர்த்து பத்தாம் வகுப்பு வரை தமிழ் வழிக் கல்வி அல்லது தமிழை ஒரு பாடமாக குறைந்த பட்சம் பத்தாம் வகுப்பு வரை கட்டாயம் படித்திருக்க வேண்டும்

B.U.M.S → மேற்குறிப்பிட்ட கல்வி தகுதி தவிர்த்து பத்தாம் வகுப்பு வரை உருது வழிக் கல்வி அல்லது உருது/அரபு/பெர்சியன் போன்றவற்றில் ஏதாவது ஒன்றை ஓர் பாடமாக குறைந்த பட்சம் பத்தாம் வகுப்பு வரை கட்டாயம் படித்திருக்க வேண்டும். மேலும் Adeeb-e-Fazil தேர்விலோ அல்லது சென்னைப் பல்கலைக்கழகம் நடத்தும் Afzal-Ul Ulama நுழைவுத் தேர்விலோ தேர்ச்சி அடைந்திருக்க வேண்டும்

கீழ்கண்ட அரசு கல்லூரிகளில் மரபுவழி மருத்துவம் சார்ந்த படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன

| படிப்பு | கல்லூரி | இடங்கள் |
|---|---|---|
| B.S.M.S (Bachelor of Siddha Medicine and Surgery) | Government Siddha Medical college, Palayamkottai | 100 |
| | Government Siddha Medical college, Chennai | 60 |
| B.A.M.S (Bachelor of Ayurveda Medicine and Surgery) | Government Ayurveda Medical College, Kottar, Nagarcoil | 60 |
| B.H.M.S (Bachelor of Homeopathy Medicine and Surgery) | Government Homoeopathy medical college, Thirumangalam, Madurai | 50 |
| B.N.Y.S (Bachelor of Naturopathy and Yogic Science) | Government Yoga and Naturopathy Medical College, Chennai | 60 |
| B.U.M.S (Bachelor of Unani Medicine and Surgery) | Government Unani Medical College, Chennai | 60 |

**நவீன மருத்துவம் (Modern Medicine):**

| படிப்பு | விரிவாக்கம் | ஆண்டுகள் | பாடப் பிரிவு (HSC) |
|---|---|---|---|
| M.B.B.S | Bachelor of Medcine, Bachelor of Surgery | 5.5 | (P, C, B, Z **OR** P, C, Bio) + **NEET** Score |
| B.D.S | Bachelor of Dental Surgery | 5 | |

கீழ்கண்ட அரசு கல்லூரிகளில் நவீன மருத்துவம் சார்ந்த படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன

| படிப்பு | கல்லூரி | இடங்கள் | ஆண்டு கல்வி கட்டணம் |
|---|---|---|---|
| M.B.B.S (Bachelor of Medicine, Bachelor of Surgery) | Madras Medical College, Chennai | 250 | Rs 13600 |
| | Stanley Medical College, Chennai | 250 | |
| | Madurai Medical College, Madurai | 150 | |
| | Thanjavur Medical College, Thanjavur | 150 | |
| | Kilpauk Medical College, Chennai | 150 | |
| | Chengalpattu Medical College, Chengalpattu | 100 | |
| | Tirunelveli Medical College, Tirunelveli | 150 | |
| | Coimbatore Medical College, Coimbatore | 150 | |
| | Govt. Mohan Kumaramangalam Medical College, Salem | 100 | |
| | K.A.P. Viswanatham Govt. Medical College, Trichy | 150 | |
| | Thoothukudi Medical College, Thoothukudi | 150 | |
| | Govt. Kanyakumari Medical College, Kanyakumari | 100 | |
| | Govt. Vellore Medical College, Vellore | 100 | |
| | Govt. Theni Medical College, Theni | 100 | |
| | Govt. Dharmapuri Medical College, Dharmpuri | 100 | |
| | Govt. Villupuram Medical College, Villupuram | 100 | |
| | Govt. Thiruvarur Medical College, Thiruvarur | 100 | |
| | Govt. Sivagangai Medical College, Sivagangai | 100 | |
| | Thiruvannamalai Medical College, Thiruvannamalai | 100 | |
| | Govt. Omandurar Medical College, Chennai | 100 | |
| | Govt. Medical College & ESIC Hospital, Coimbatore | 80 | |
| | Govt. Pudukottai Medical College & Hospital, Pudukottai | 150 | |
| B.D.S (Bachelor of Dental Surgery) | Tamil Nadu Government Dental College, Chennai | 100 | Rs 11600 |

**பாரா மெடிக்கல் பட்டப் படிப்புகள் (Para Medical Degree Courses)**

| **படிப்பு** | **விரிவாக்கம் / பிரிவு** | **ஆண்டுகள்** | **பாடப்பிரிவு (HSC)** |
|---|---|---|---|
| B.Pharm | Bachelor of Pharmacy | 4 | P, C, B, Z **OR** P, C, Bio **OR** P, C, M |
| B.A.S.L.P | Bachelor of Audiology Speech Language Pathology | 4 | |
| B.Sc | Optometry | 4 | |
| B.P.T | Bachelor of Physiotherapy | 4.5 | P, C, B, Z **OR** P, C, Bio |
| B.O.T | Bachelor of Occupational Theraphy | 4.5 | |
| B.Sc | Radiology and Imaging Technology | 3.5 | |
| B.Sc | Radio Therapy Technology | 3.5 | |
| B.Sc | Cardio-Pulmonary Perfusion Technology | 4 | |
| B.Sc | Nursing | 4 | |

| படிப்பு | கல்லூரி | இடங்கள் | OC | BC | BCM | MBC /DNC | SCA | SC | ST | Fee per Year |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| B.A.S.L.P (Bachelor of Audiology Speech Language Pathology) | Madras Medical College, Chennai | 20 | 190.25 | 193.75 to 184 | 185.5 | 187 to 184 | * | 179.25 | * | Rs 1200 |
| B.Sc - Radiology and Imaging Technology | Madras Medical College, Chennai | 14 | * | 191 to 180 | 191.75 to 180.75 | 188 to 180 | 180.75 | 181 to 177.25 | 175.25 | Rs 1200 |
| | Stanley Medical College, Chennai | 16 | | | | | | | | |
| | Chengalpattu Medical College, Chengalpattu | 13 | | | | | | | | |
| B.sc - Radio Theraphy Technology | Madras Medical College, Chennai | 12 | * | 186.5 to 182.5 | * | 185.75 to 181 | 179 | 185.25 to 176.75 | * | Rs 1200 |
| B.Sc - Cardio-Pulmonary Perfusion Technology | Madras Medical College, Chennai | 10 | * | 195 to 177.25 | * | 192.25 | * | * | * | Rs 1200 |
| B.Sc – Optometry | Regional Institu te of Ophthalmology and Govt. Ophthalmic Hospital, Chennai | 20 | * | 194.75 to 184.25 | 193 to 185.5 | 187.5 to 181.5 | 181 | 185.5 | * | Rs 1750 |
| B.Pharm - Bachelor of Pharmacy | Madras Medical College, Chennai | 36 | * | 194.5 to 171.25 | 191.75 to 188.25 | 193 to 177.5 | 185 | 185.25 to 179.75 | * | Rs 1200 |
| | Madurai Medical College, Madurai. | 45 | | | | | | | | |
| B.Sc – Nursing | Madras Medical College, Chennai | 35 | * | 196 to 179.25 | 189.75 to 181.5 | 193.5 to 179.75 | 182 to 174.75 | 189 to 173.25 | 164.25 to 163 | Rs 1200 |
| | Madurai Medical College, Madurai | 42 | | | | | | | | |
| | Chengalpattu Medical College, Chengalpattu | 45 | | | | | | | | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | Government Mohan Kumaramangalam Medical College, Salem | 47 | | | | | | | | |
| | Government Theni Medical College, Theni. | 47 | | | | | | | | |
| B.P.T (Bachelor of Physiotheraphy) | College of Physiotherapy, Government Institute of Rehabilitation Medicine, K.K.Nagar, Chennai. | 12 | * | 194 to 182.75 | 189.75 to 178 | 194.25 to 181.75 | 182.75 | 184 to 173.5 | 167 | Rs 1200 |
| | Government College of Physiotherapy, Periyamelaguparai, Trichy. | 17 | | | | | | | | |
| B.O.T (Bachelor of Occupational Theraphy) | KMCH College of Occupational Theraphy. Kovai Medical Centre & Hospital Campus. Coimbatore (**தனியார் கல்லூரி)** | 26 | * | 186 to 162.75 | 163.25 | 169 to 154.5 | 144.5 | 154.75 to 149 | * | Rs 33000 |

2016-2017ஆம் ஆண்டுக்கான கட்-ஆப் மதிப்பெண்கள் மேற்கண்ட அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளது. கட்-ஆப் மதிப்பெண்கள் ஒவ்வொரு ஆண்டிற்கும் மாறுபடும். கீழ்கண்ட அரசு கல்லூரிகளில் பாரா மெடிக்கல் பட்டப் படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன

***** என்று குறிப்பிடப்பட்டுள்ள இடங்களுக்கு கட்-ஆப் மதிப்பெண்கள் இணையத்தில் கிடைக்கப்பெறவில்லை

**<u>பாரா மெடிக்கல் பட்டயப் படிப்புகள் (Para Medical Diploma Courses)</u>**

<table>
<tr><th>படிப்பு</th><th>ஆண்டுகள்</th><th>பாடப் பிரிவு (HSC)</th></tr>
<tr><td>Diploma in Pharmacy (D.Pharm)</td><td>2</td><td>P, C, B, Z<br>OR<br>P, C, Bio<br>OR<br>P, C, M</td></tr>
<tr><td>Diploma in Nursing (DGNM) – மாணவிகளுக்கு மட்டும்</td><td>2</td><td>P, C, B, Z<br>OR<br>P, C, Bio<br>OR<br>(Vocational Nursing) with Nursing<br>OR<br>Foundation science as a vocational subject<br>OR<br>All other group students</td></tr>
<tr><td>Dental Mechanic (Male)</td><td>2</td><td rowspan="4">P, C, B, Z<br>OR<br>P, C, Bio</td></tr>
<tr><td>Dental Hygienist (Female)</td><td>2</td></tr>
<tr><td>Diploma in Radio Diagnosis Technology – (D.R.D.T.)</td><td>2</td></tr>
<tr><td>Diploma in Radio Therapy Technology – (D.R.T.T.)</td><td>2</td></tr>
<tr><td>Diploma in Medical Laboratory Technology (D.M.L.T)</td><td>2</td><td>P, C, B, Z<br>OR<br>P, C, Bio<br>OR<br>Vocational medical laboratory assistant</td></tr>
<tr><td>Diploma in Optometry</td><td>2</td><td>P, C, Bio, M<br>OR<br>P, C, M</td></tr>
</table>

கீழ்கண்ட அரசு மருத்துவக் கல்லூரிகளில்/மாவட்ட மருத்துவ தலைமை இடங்களில் செவிலியர் பட்டயப் படிப்பு (**Diploma Nursing - DGNM**) கற்பிக்கப்படுகிறது. பெரும்பாலான அரசு மருத்துவக் கல்லூரிகளில் ஏனைய மருத்துவ பட்டயப் படிப்புகளும், செர்டிபிகேட் படிப்புகளும் கற்பிக்கப்படுகின்றன

| கல்லூரி | இடங்கள் |
|---|---|
| Madras Medical College, Chennai | 100 |
| Stanley Medical College, Chennai | 100 |
| Kilpauk Medical College, Chennai | 100 |
| Madurai Medical College, Madurai | 100 |
| Thanjavur Medical College, Thanjavur | 100 |
| Tirunelveli Medical College, Tirunelveli | 100 |
| K.A.P.V. Viswanatham Medical College, Trichy | 100 |
| Govt. Mohan Kumaramangalam Medical College, Salem | 100 |
| Coimbatore Medical College, Coimbatore | 100 |
| Kasthurba Gandhi Hospital for Women & Children, Chennai | 50 |
| Vellore Medical College, Vellore | 100 |
| Thoothukudi Medical College, Thoothukudi | 100 |
| Kanyakumari Medical College, Kanyakumari | 50 |
| Chengalpattu Medical College, Chengalpattu | 100 |
| Theni Medical College, Theni | 100 |
| District Head Quarters Hospital, Kancheepuram | 50 |
| Cuddalore District Head Quarters Hospital, Cuddalore | 50 |
| Ramanathapuram District Head Quarters Hospital, Ramanathapuram | 100 |
| Dindigul District Head Quarters Hospital, Dindigul | 50 |
| Uthagamandalam District Head Quarters Hospital, Uthagamandalam | 50 |
| Tirupur District Head Quarters Hospital, Tirupur | 100 |
| Nagapattinam District Head Quarters Hospital, Nagapattinam | 100 |
| Virudhunagar District Head Quarters Hospital, Virudhunagar | 100 |



மருத்துவம் சார்ந்த படிப்பு குறித்த விவரங்களை மேலும் அறிய கீழ்கண்ட இணையதளங்களைக் காணவும்

http://www.tnhealth.org/dme/mesc.php#S

http://www.tnhealth.org/

**Para Medical Certificate Courses:**

| படிப்பு | ஆண்டுகள் | பாடப் பிரிவு (HSC) |
|---|---|---|
| Cardio Sonography Technician | 1 | P, C, B, Z<br>**OR**<br>P, C, Bio |
| ECG/Tread Mill Technician | | |
| Pump Technician | | |
| Cardiac Catheterisation Lab Technician | | |
| Emergency Care Technician | | |
| Respiratory Therapy Technician | | |
| Dialysis Technician | | |
| Anaesthesia Technician | | |
| Theatre Technician | | |
| Orthopaedic Technician | | |
| Audiometry Technician | | |
| Hearing Language and SpeechTechnician | | |
| Clinical, Therapeutic, Nutrition & Food Service Management Technician | | |
| E.E.G./E.M.G. CourseTechnician | | |



**12.3. கால்நடை மருத்துவம், உணவு தொழில் நுட்பம், பால் வள தொழில் நுட்பம் சார்ந்த படிப்புகள்:**

| படிப்பு | விரிவாக்கம்/பிரிவு | ஆண்டுகள் | பாடப் பிரிவு (HSC) |
|---|---|---|---|
| BVSc & AH | Bachelor of Veterinary Science & Animal Husbandry | 5.5 | P, C, Bio<br>**OR**<br>P, C, B, Z<br>**OR**<br>Bio, AP/Poultry/Dairying (Vocational group) |
| B.Tech | Food Technology | 4 | P, C, M, Bio |
| B.Tech | Poultry Technology | 4 | |
| B.Tech | Dairy Technology | 4 | |

கால்நடை மருத்துவம் சார்ந்த படிப்பு குறித்து மேலும் விவரங்களை அறிய http://www.tanuvas.tn.nic.in/ இணையதளத்தைக் காணவும்

2016-2017ஆம் ஆண்டுக்கான கட்-ஆப் மதிப்பெண்கள் கீழ்கண்ட அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளது. கட்-ஆப் மதிப்பெண்கள் ஒவ்வொரு ஆண்டும் மாறுபடும்.

கீழ்கண்ட அரசு கல்லூரிகளில் கால்நடை மருத்துவம், உணவு தொழில் நுட்பம், பால் வள தொழில் நுட்பம் போன்ற படிப்புகள் கற்பிக்கப்படுகின்றன.

| படிப்பு | கல்லூரி | இடங்கள் | OC | BC | BCM | MBC/ DNC | SCA | SC | ST | Fee per Year |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| BVSc & AH (Bachelor of Veterinary Science & Animal Husbandry) | Madras Veterinary College, Chennai | 120 | 195.75 Ac<br>194.00 Vo | 195.00 Ac<br>193.25 Vo | 193.25 Ac<br>172.33 Vo | 194.25 Ac<br>187.83 Vo | 185 Ac<br>162.67 Vo | 189 Ac<br>178.67 Vo | 178 | Approx Rs 21000 |
| | Veterinary College and Research Institute, Namakkal | 80 | | | | | | | | |
| | Veterinary College and Research Institute, Tirunelveli | 60 | | | | | | | | |
| | Veterinary College and Research Institute, Orathanadu,Thanjavur Dist | 60 | | | | | | | | |
| B.Tech (Food Technology) | College of Food and Dairy Technology Koduvalli, Chennai | 20 | 192.5 | 187 | 175.5 | 188 | 174.25 | 183.25 | * | Approx Rs 20000 |
| B.Tech (Poultry Technology) | College of Poultry Production & Management Hosur | 20 | 183.75 | 174.5 | 153.5 | 178.25 | 154.25 | 165.5 | * | Approx Rs 20000 |
| B.Tech (Dairy Technolory) | College of Food and Dairy Technology Koduvalli, Chennai | 20 | 192 | 181.5 | 182.25 | 185.5 | 176.25 | 180.75 | * | Approx Rs 20000 |

* என்று குறிப்பிடப்பட்டுள்ள இடங்களுக்கு கட்-ஆப் மதிப்பெண்கள் இணையத்தில் கிடைக்கப்பெறவில்லை

### 12.4. மீன் வளம் சார்ந்த படிப்புகள்:

| படிப்பு | விரிவாக்கம்/பிரிவு | ஆண்டுகள் | பாடப் பிரிவு (HSC) |
|---|---|---|---|
| B.F.Sc | Bachelor of Fisheries Science | 4 | P, C, Bio<br>**OR**<br>P, C, B, Z<br>**OR**<br>Bio, [Fisheries/AP] (Vocational group) |
| B.E | Fisheries Engineering | 4 | P, C, M, Bio |

2016-2017ஆம் ஆண்டுக்கான கட்-ஆப் மதிப்பெண்கள் கீழ்கண்ட அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளன. கட்-ஆப் மதிப்பெண்கள் ஒவ்வொரு ஆண்டும் மாறுபடும்.

| படிப்பு | கல்லூரி | இடங்கள் | OC | BC | BCM | MBC/ DNC | SCA | SC | ST | Fee per Year |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| B.F.Sc (Bachelor of Fishery Science) | Fisheries College and Research Institute (FC&RI), Thoothukudi | 42 | 192.5 | 188.5 | 177.25 | 188.5 | 184 | 184.25 | 180.25 | Approx Rs 8000 |
| | Fisheries College and Research Institute, (FC&RI) Ponneri (Thiruvallur district) | 60 | | | | | | | | |
| B.E (Fisheries Engineering) | College of Fisheries Engineering, Nagapattinam | 20 | 193 | 190.75 | 183.75 | 190.75 | 186.5 | 186.5 | * | Approx Rs 8000 |

* என்று குறிப்பிடப்பட்டுள்ள இடங்களுக்கு கட்-ஆப் மதிப்பெண்கள் இணையத்தில் கிடைக்கப்பெறவில்லை

மீன்வளம் மற்றும் தொழில்நுட்பம் சார்ந்த படிப்பு குறித்து மேலும் விவரங்களை அறிய http://tnfu.ac.in/ இணையதளத்தைக் காணவும்

### 12.5. பொறியியல் மற்றும் தொழில்நுட்பம்

பொறியியல் மற்றும் தொழில்நுட்ப படிப்பில் கீழ்கண்ட பல்வேறு துறைகள் உள்ளன. கீழ்கண்ட அட்டவணையில் SS என்பது **S**elf-**S**upporting Courses என்பதன் சுருக்கம். அரசு உதவி பெறும் கல்லூரிகளில் இவ்வகை பிரிவு உள்ளது. அரசு உதவி பெறும் கல்லூரிகளில் இப்படிப்புக்கான (Self Supporting Courses) கல்வி கட்டணம் தனியார் கல்லூரிகளில் செலுத்தும் கல்வி கட்டணத்திற்கு நிகராக இருக்கும். கீழ்கண்ட அரசு/அரசு உதவி பெறும் கல்லூரிகளில் பொறியியல் கற்பிக்கப்படுகிறது.

| **UNIVERSITY DEPARTMENTS** | | |
|---|---|---|
| **கல்லூரி** | **பிரிவு** | **எண்ணிக்கை** |
| University Departments of Anna University, Chennai – CEG Campus<br><br>Sardar Patel Road, Guindy, Chennai(Dt.), Pin - 600025<br><br>044-22358491<br><br>www.annauniv.edu | Agricultural and Irrigation Engineering (SS) | 60 |
| | Bio Medical Engg. (SS) | 60 |
| | Civil Engineering | 60 |
| | Civil Engineering (Tamil Medium) | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Computer Science and Engineering (SS) | 120 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engg. (SS) | 120 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Geo-Informatics | 60 |
| | Industrial Engineering | 60 |
| | Information Tech. (SS) | 120 |
| | Manufacturing Engineering | 60 |
| | Material Science and Engineering (SS) | 60 |
| | Mechanical Engineering | 120 |
| | Mechanical Engineering (Tamil Medium) | 60 |
| | Mining Engineering | 30 |
| | Printing Technology | 60 |
| University Departments of Anna University, Chennai – ACT Campus<br><br>Sardar Patel Road, Guindy, Chennai(Dt.), Pin -600025<br><br>044-22359100<br><br>www.annauniv.edu | Apparel Technology (SS) | 30 |
| | Ceramic Technology (SS) | 60 |
| | Chemical Engineering | 60 |
| | Chemical Engineering (SS) | 60 |
| | Food Technology (SS) | 40 |
| | Industrial Bio-Technology | 40 |
| | Industrial Bio-Tech. (SS) | 20 |
| | Leather Technology | 60 |
| | Petroleum Engineering and Technology (SS) | 60 |
| | Pharmaceutical Technology (SS) | 60 |
| | Textile Technology | 60 |

| | | |
|---|---|---|
| University Departments of Anna University,<br><br>Chennai – SAP Campus<br>Sardar Patel Road, Guindy, Chennai(Dt.),<br>Pin - 600025<br><br>044-22352341<br>www.annauniv.edu/sap | Architecture | 120 |
| University Departments of Anna University,<br><br>Chennai – MIT Campus<br>Chrompet,<br>Tambaram (Tk.), Kancheepuram(Dt.),<br>Pin – 600044<br><br>044-22516002<br>www.annauniv.edu/mitindia.edu | Aeronautical Engineering | 60 |
| | Automobile Engineering | 60 |
| | Automobile Engineering (SS) | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Computer Science and Engineering (SS) | 60 |
| | Electronics and Communication Engg.(SS) | 120 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Electronics and Instrumentation Engg. (SS) | 60 |
| | Electronics and Instrumentation Engineering | 60 |
| | Information Tech. (SS) | 120 |
| | Mechanical Engg. (SS) | 60 |
| | Production Engineering | 60 |
| | Rubber and Plastic Technology | 60 |

| **GOVERNMENT COLLEGES** | | |
|---|---|---|
| **கல்லூரி** | **பிரிவு** | **எண்ணிக்கை** |
| Thanthai Periyar Govt. Institute of Technology<br>Bagayam, Vellore(Dt.), Pin - 632002<br>Phone : 0416-2267762<br>www.tpgit.edu.in | Civil Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 120 |
| | Mechanical Engineering | 120 |
| Government College of Technology, Coimbatore (Autonomous)<br><br>Thadagam Road,<br>G.C.T Post, Coimbatore(Dt.),<br>Pin - 641013<br>Phone : 0422-2432221<br>www.gct.ac.in | Civil Engineering | 120 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Electronics and Instrumentation Engineering | 60 |
| | Industrial Bio-Technology | 100 |
| | Information Technology | 60 |
| | Mechanical Engineering | 120 |

| | | |
|---|---|---|
| | Production Engineering | 60 |
| Government College of Engineering – Dharmapuri<br>Chettikarai,<br>Dharmapuri(Dt.),<br>Pin – 636704<br>Phone : 04342-290070<br>www.gcedpi.edu.in | Civil Engineering | 60 |
| | Computer Science Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 60 |
| Government College of Engineering – Bargur<br>Madepalli, Bargur, Krishnagiri(Dt.),<br>Pin – 635104<br>Phone : 04343-266067<br>www.gcebargur.ac.in | Computer Science and Engineering | 40 |
| | Electrical and Electronics and Engineering | 40 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 60 |
| Government College of Engineering – Salem (Autonomous)<br>NH 7, Bangalore Highway, Karuppur,<br>Omalur(Tk.),<br>Salem(Dt.), Pin – 636011<br>Phone : 0427-2346102<br>www.gcesalem.edu.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 50 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 50 |
| | Metallurgical Engineering | 50 |
| Government College of Engineering – Thanjavur<br>Gandarvakottai Road, Sengipatti, Thanjavur(Dt.),<br>Pin – 613402<br>Phone: 04362-221113<br>www.gcetj.edu.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 60 |
| Government College of Engineering – Srirangam<br>Sethurappatti, Tiruchirapalli(Dt.), Pin – 620012<br>Phone : 0431-2906635<br>www.gces.edu.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 60 |
| Government College of Engineering – Tirunelveli<br>Kanyakumari Road, Perumalpuram,<br>Thirunelveli(Dt.),<br>Pin – 627007<br>Phone : 0462-2552450<br>www.gcetly.ac.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 120 |
| | Mechanical Engineering | 120 |

| | | |
|---|---|---|
| Government College of Engineering, Bodiyanayakkanur<br>Melachokkanathapuram, Theni(Dt.), Pin – 625582<br>Phone : 04546-282555<br>www.gcebodi.ac.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 60 |
| A.C. College of Engineering and Technology (Autonomous),<br>Karaikudi<br>Sivaganga(Dt.),<br>Pin – 630003<br>Phone : 04565-224535<br>www.accetedu.in | Civil Engineering | 60 |
| | Computer Science and Engineering | 60 |
| | Electrical and Electronics Engineering | 120 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Mechanical Engineering | 120 |



| GOVERNMENT AIDED COLLEGES | | |
|---|---|---|
| **கல்லூரி** | **பிரிவு** | **எண்ணிக்கை** |
| P.S.G. College of Technology, Coimbatore (Autonomous)<br>Avinashi Road, Peelamedu, Coimbatore(Dt.),<br>Pin – 641004<br><br>Phone : 0422-2572177<br>www.psgtech.edu | Automobile Engg. (SS) | 60 |
| | Bio Medical Engg. (SS) | 60 |
| | Bio-Technology (SS) | 60 |
| | Civil Engineering (SS) | 30 |
| | Civil Engineering | 30 |
| | Computer Science and Engineering (SS) | 120 |
| | Electrical and Electronics (Sandwich) (SS) | 60 |
| | Electrical and Electronics Engineering | 60 |
| | Electronics and Communication Engineering. (SS) | 60 |
| | Electronics and Communication Engineering | 60 |
| | Fashion Technology (SS) | 60 |
| | Information Technology (SS) | 120 |
| | Instrumentation and Control Engineering (SS) | 60 |
| | Mechanical Engineering (Sandwich) (SS) | 60 |
| | Mechanical Engineering | 60 |
| | Mechanical Engg. (SS) | 60 |
| | Metallurgical Engineering | 30 |
| | Metallurgical Engg. (SS) | 30 |
| | Production Engineering (Sandwich) (SS) | 60 |
| | Production Engineering | 30 |
| | Production Engineering (SS) | 30 |

